# வட்ட மேஜை மாநாடு லண்டன் 1931

மன்னர்களின் இந்தியாவையும் பிரிட்டிஷ் இந்தியாவையும் சேர்த்து, ஒரே இந்தியா என்று சுதந்திரம் கேட்டவர்கள் யார்.?

சொத்து உடையவர்களுக்கே வோட்டு என்பதா ஜனநாயகம்..ஏழைகளுக்கும் வோட்டு வேண்டும் என்று கேட்டவர்கள் யார்.?

கோ பேக் சைமன் இயக்கத்தை தோற்கடித்து 1928ல் சாதி மத அடிப்படையில் மக்கள் தொகை கணக்கெடுக்க வேண்டும் என்று தீப்பொறியாய் அறப்போர் நடத்தி சைமன் கமிஷனை வர வைத்தவர் யார்.? எந்தெந்த சாதிகள் தீண்டப்படாதவர்கள் என்பதை இறுதிப்படுத்த 10 கேள்விகள் உள்ள கேள்வித்தாளை சைமனிடம் தந்தது யார்.? அதன்படி 30 கோடியில் 7 கோடி தீண்டப்படாதோர் என கணக்கை முடித்த சைமனிடமும் லண்டன் வட்டமேசையிலும் கல்வி, வேலை, அதிகாரம், அரசியலில் இடஒதுக்கீடு கேட்டவர்கள் யார்.?

முஸீலீம்கள், கிறிஸ்தவர்கள், தீண்டபடாதோர் ஆகியோர்களை இந்துக்கள் அல்லாத சிறுபாண்மையோராக அறிவித்து தேர்தலில் தனி தொகுதிகளை மக்கள் தொகை விகிதத்தில் அறிவிக்க லண்டன் வட்ட மேசையில் வாதாடியவர்கள் யார்.?

அரசு ஊழியர்களுக்கு ஊதிய கமிஷன் அமைக்க சொன்னவர் யார்.? பெண்களுக்கு தனித்தொகுதி, வோட்டுரிமை கேட்டவர்கள் யார்.?

**Dr.B.R.**அம்பேத்கார் அவர்களுடன் திருமதி.ராதாபாய் சுப்பராயன் குமாரமங்கலம், திருமதி. பேகம் ஜகனரா ஷானவாஸ், திரு.முகமது அலி ஜின்னா, திரு.ஆகாகான், திவான் பகதூர் சர்.ஆர்க்காடு ராமசாமி நீதிக்கட்சி, திவான் பகதூர் ரெட்டைமலை சீனிவாசன் ஆகியோரே கேட்டவர்கள்.

மேற்கண்ட கோரிக்கைகளின் நியாயத்தை உணர்ந்து அவைகள் லண்டன் மன்னரின் ஒப்புதலை பெற்று விடும் என்பதை அறிந்த, வட்ட மேசை மாநாட்டை புறக்கணித்த காந்தியார் உடனே லண்டனுக்குச்சென்று மேற்கண்ட நியாமான கோரிக்கைகளை எதிர்த்து வாதாடி தோற்று பின் இந்தியா திரும்பி பூனா சிறையில் உண்ணாவிரதம் இருந்தார். இறுதியில் வட்டமேசை மாநாட்டு முடிவுகளில் பல நிறைவேறியது. சொத்து இல்லாத நூறு ஏழைகளில் ஒருத்தருக்கு ஓட்டு என்ற அடிப்படையில் 1934ல் தேர்தல் நடந்தது. வட்ட மேஜை மாநாடு முடிவுகளின் படி இங்கிலாந்து பிரதமர் ராம்சே மெக்டொனால்டு அவர்கள்

**கம்யூனல் அவார்ட் 1932, இந்திய நல சட்டங்கள் 1934ஐ பிரகடனம் செய்தார்.**

**Dr.B.R.அம்பேத்கார் அவர்கள் 1942ல் வைசிராய் அமைச்சரவையில் தொழிலாளர் அமைச்சராக மன்னரால் நியமிக்கப்பட்டு தொழிலாளர் நலன் பேணினார். சுதந்திர இந்தியாவில் அண்டை நாடுகளுடன் சண்டை நீதிக்கட்சியின் கோரிக்கையான BC இட ஒதுக்கீடை காங்கிரஸ் எதிர்த்தது, ஆகிய காரணங்களினால் சட்ட அமைச்சர் பதவியை ராஜினாமா செய்து மனம் வெறுத்து உடல் நலம் கெட்டு உயிர் நீத்தார்.**

**பிற்காலத்தில் 1930 களில் பல கோடி மக்களை உறுப்பினர்களாக வைத்திருந்த Dr.B.R.அம்பேத்கார் சம்மேளனம் காங்கிரஸ் உள்ளிட்ட முதலாளித்துவ கட்சிகளால் அழிந்தது. BC இட ஒதுக்கீடை சட்டமாக்கிய பிரதமர் திரு.V.P.சிங் அவர்கள் உலக அறிவாளிகளில் ஒருவரான ஒடுக்கப்பட்ட மக்களின் போராளி Dr.B.R.அம்பேத்காரின் பேச்சு எழுத்துக்களை 22 அரசாங்க புத்தகங்களாக தமிழ் உள்ளிட்ட இந்திய மொழிகளில் வெளியிட்டு அதை மக்கள் படித்து அவரது கனவுகளை நிஜமாக்க வேண்டுமென்றார். அவரை யாரும் படிக்காததால் கனவு இன்னும் நிஜமாகவில்லை.**

**சாது ஜான்சன், அருள்சந், 14-05-2022**

**Dr.B.R.அம்பேத்கார் நூல்தொகுப்பு தொகுதி 4, 5**









